உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ சற்குருவே நம:

# சாலைக் குமரேசர் அந்தாதி.

இஃது

திருநெல்வேலி சிந்துபூந்துறை வாசரும்
விடுதி பெற்ற போலீஸ் இன்ஸ்பெக்டருமாகிய

**B. B. நாராயணசுவாமி நாயுடு**

அவர்களியற்றி



திருநெல்வேலி ஜங்ஷன்
ஆ. முத்துக்குமாரசாமிப் பிள்ளையவர்களால்

தமது
ஸ்ரீ சரஸ்வதி விலாஸ அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பெற்றது.

1937

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ் ஜோதி.

## முன்னுரை.

திருவருட் பெருஞ்செல்வ மலிந்திலங்குமிப் பாண்டி நாட்டின்கண் மிகத் தலைசிறந்த தாயதும் அரும்பெருங் கருணையங்கடல் போன்ற புண்ணிய நதியெனப்புகழுந் தாமிர வருணி புடைசூழ்ந்துள்ளதும் ஆதிமத்யாந்த ரகிதராம் வேயின்ற முத்தர் திருவவதாரஞ் செய்தருளியதுமாகிய திவ்ய க்ஷேத்திர மென்னுந் திருநெல்லையம்பதிக்குக் குணபாலில்

சீருஞ் சிறப்புஞ் சிறந்து விளங்கப்பெற்றதும் ஸ்ரீ திருஞான சம்பந்தப் பெருமானால் திருவாய் மலர்ந்தருளப் பெற்றதுமாகிய உயரிய மாண்புறுஞ் சிந்துபூந்துறை யென்னும் நற்பதியின்கண் திருக்கோவில் கொண்டருளியும் அசுரரை வாட்டி அமரரை மீட்டியருளியவருமான ஸ்ரீ குமரேசப் பெருமான் பூங்கழற் குகந்த தண்டமிழலங்கலொன் றியற்றித்தரல் வேண்டுமெனப் பல அன்பர்களுங் கேட்டுக்கொண்ட வண்ணமே அடியேன் சிற்றறிவிற் கெட்டிய வளவில் (சாலைக் குமரேசர் அந்தாதி) என்னு மிந் நூலினை யியற்றி வண்ணார்பேட்டை ஜவுளி & பலசரக்கு வர்த்தகம் திருவாளர் ராம. ஆனந்தம்பிள்ளை யவர்களிடம் ஒப்பு விக்க இதனை அச்சுவாகன மேற்றுவித்தற்காக சிலபொருளுதவி புரிந்தும், திருநெல்வேலி ஜங்ஷன் சரஸ்வதி அச்சியந்திரசாலை அதிபர் உயர்திரு. A. முத்துக்குமாரசாமிப்பிள்ளையவர்கள் நிதி சகாயத்தாலு மிதனை அச்சிடுவித்து சம்பூர்ணமாக்கியுள்ளார்க ளாதலா லித்தரும சீலர்களின் பேருதவியை அன்பர்கள் யாவர்க ளும் மறக்கற்பாலதன்று.

அன்றியும் ஷடாந்தாத்வைத சமரச சுத்த சன்மார்க்க மகிபராயிலங்கும் யாழ்ப்பாணம், ஸ்ரீலஸ்ரீ, சுவாமி நித்தியானந்த சரஸ்வதியவர்கள் தன்னலமும் சரீரசிரமமும் பாராட்டாது உலகவூழியராய்ப் பொதுநலங் கருதி தோத்திரப்பா முதலிய அநேக நீதி நூல்களை யியற்றிப் பொதுமக்களுக்கே இலவசமாக உதவிய ஜீவகாருண்ய சொரூபியாகையா லிந்நூலினையும் சென்ற வருடம் என்னாலியற்றி அச்சிடப்பெற்ற நெல்லைக் கலம்பகமென்னும் நூலினையும் பரிசீலனை செய்தும் சிறப்புப்பாயிர முதலியும் புரூவ் முதலியவைகளைப் பார்வையிட்டும் புத்தகங்களை வெளிப்படுத்தியருளிய யிவ்வரும்பெருஞ் செய்நன்றியை அடியேனும் மற்றும் அறிஞர்களு மெஞ்ஞான்றும் போற்றற்பாலதே.

ஆகையா லிப்பெரியார் பிரணவதேகியாயும் தீர்க்கதரிசியாயு மிளிர்ந்து மேலுமேலும் பொதுநலச் சேவைபுரிந் துய்யும் வண்ணம் எல்லாம்வல்ல முழுமுதற் பரம்பொரு ளடிமலர் முடிகொண்டிறைஞ்சா நின்றனன்.

ஸ்ரீ சற்குருநாதன் துணை.

இங்ஙனம்,

நூலாசிரியர்.

1112-ம் ஆண்டு
தாதுவருஷ தைமீ



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ் ஜோதி.

## சிறப்புப்பாயிரம்.

---

திருநெல்வேலி மணிவாசக மன்றத் தலைவரும் ஸ்ரீ நெல்லையப்பர் கோவில் தர்மகர்த்தரும் தாகூர் சட்டப் பேராசிரியருமாகிய

உயர்திரு K. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L.

அவர்களுதவியது.

சீர்மிகுந் திருநெல்லையம்பதிக்குக் குணபா லிலங்குஞ் சிந்துபூந்துறையின்கண் போலீஸ் இன்ஸ்பெக்டர் உத்தியோகத்திலிருந்து ஆறுதல் பெற்று வாழுங் கவிப்பெருங் கொண்டலாந் திருவாளர் B. B. நாராயண சுவாமி நாயுடு அவர்கள் பலவகைப் பிரபந்தங்கள் செந்தமிழிற் பாடியிருப்பதுடன் இப்போது இயற்றியிருக்குமிச் சாலைக் குமரேசர் அந்தாதியைப் படித்துப் பார்த்தேன். இது இனிய செஞ்சொற்களா லமைந்து எளிதாய்ப் பகுக்கப்பட்டு உவகை தரும் யமகம், திரிபு, முதலிய சொல்லணி பொருளணிகளும், பத்திவளர்க்கும் அரிய கடவுட் கருத்துக்களும் பொருந்திக் கற்பார்க்கு நல்ல அறிவுவிருந்தாகத் திகழ்வதால், தமிழன்பர்களும் முருகனடியார்களும் இதனை வாசித்துணர்ந்துப் பேரானந்தப் பெரும்பேற்றை யடைதற்குரியராவர், இந்நூ லெஞ்ஞான்றுஞ் சிறந்திலங்குவதாக.

---

திருநெல்வேலி ஜங்ஷன் ம. தி. தா. இந்து கலாசாலை

தலைமைத் தமிழாசிரியர்

வித்வான் P. K. அருணாசலக் கவுண்டரவர்க ளுதவியது.

கவித்வ சக்தியை நேரிற் காணாமல் யாராவது கேட்டால் உண்மை யென்று நம்பமுடியாதபடி அவ்வளவு ஆச்சரியமாகப்

பரப்பியருளிய திருச்சிராப்பள்ளி மகா வித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை யவர்களைப்பற்றி ஒருநா ளெனது வகுப்பறையின்கண் பிரஹ்ம ஸ்ரீ டாக்டர், உ. வே. சாமிநாதையரவர்கள் வந்து, கருத்துக்களை நினைக்கலாம், நினைத்தவற்றைச் சொல்லலாம், சொல்லதையே அழகுபெறப் பன்னலாம், அதனையே கவியாக அமைக்கலாம், ஆனால் நினைத்தவற்றை நினைத்த வழியே தமிழ்ச் சொற்கள் ஏவல் கேட்ப வருத்தமின்றி விளையாட்டாகக் கவிபாடுந் திறமை இவரைப்போன்று எல்லாக் கவிஞர்களுக்கும் வாய்ப்ப தரிது, என்று சொல்லி முடித்தார்கள். அத்தகைய கருவிலே திருவமைந்த கவிஞரை என்வாழ்க்கையில் நான்காணவா போகின்றேனென்று அப்பொழுது ஏங்கலானேன்.

அப்பால் 1931 ஆம் ஆண்டு இந்து கலாசாலையின் தமிழாசிரியனாகத் திருநெல்வேலிக்கு வந்தபோது, திரு. நா. லக்ஷமணப் பெருமாள், B. A., அவரோடு சிந்துபூந்துறையில் அவர் வீட்டிற்குச் சென்றேன், அங்கு உள் திண்ணைமேல், நெற்றியின் அகலமானது அவருடைய அறிவைப் புலப்படுத்த, வளர்ச்சியமைந்த தோற்றமுடைய முதியவர் சோபாவில் சாய்ந்திருந்தார். இவர் தான் சித்திரக் கவியரசர் B. B. நாராயணசுவாமி நாயுடு அவர்கள் மிகுந்த அறிவும் புலமையும் வாய்க்கப் பெற்றிருந்தும் இவர்கள் அலைகளெல்லாம் அடங்கி ஒலியற்றிருக்கும் ஆழ்ந்த கடலைப் போலவே காணப்பெற்றார்கள்.

இவர்கள் புராணங்கள் பிரபந்தங்கள் தனிப் பாடல்கள் பல பல வகையின செய்யுட்களை யுடையனவாக சுமார் (55) நூல்களுக்கு இவர்கள் ஆசிரியராவார்கள். அவற்றுள் அனேகம் அச்சிடப்பெற்று வழங்குகின்றன. தாம் கண்டும் கேட்டும் அனுபவித்தும் அறிந்தவற்றை செய்யுட்களில் ஆங்காங்கே அமைக்கும் ஆற்றலமைந்துள்ளார் ஆதலின் இவர்கள் தண்டமிழ்க் கவிக்குத் தனியழகுண்டு பொருட்பொலிவோடு யமகம், திரிபு, மடக்கு

களில் வேறு எவரும் செய்திராத விசித்திரமான அமைப்புக்களையும் இவர்கள் நூல்களிற் காணலாம்.

மேலும் கவித்வத்துடன் மனநிறைவு, நன்றிமறவாமை, ஒழுக்க முதலிய அரும் பண்புகளாலும் நன்குமதிக்கப்படு மிவர்கள் நீடூழி வாழ்ந்து தமிழுக்கு நிலைத்த தொண்டாற்ற எல்லாம் வல்ல இறைவனை அருள்புரியும்வண்ணம் வேண்டுகின்றேன்.

---

நாங்குநேரித் தாலுகா, வள்ளியூர், வேதாந்த ஞானபானுவாயும்

ஜோதிட சிகாமணியாயு மிளிரும்

உயர்திரு அ. நாக ஆச்சாரியாரவர்க ளியற்றியது.

## பதினான்கு சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

திருவோங்கு செங்கமல மலரோங்கு வெள்ளனஞ்
சேர்ந்தோங்கப் பணில மோங்குந்
திகழ்தடம் பணையோங்கு திருநெல்லை யம்பதி
செழீஇய குணபாலி லோங்குந்
தருவோங்கு சாலைபூந் தளியோங்கு குமரேசர்
சதங்கைபத மோங்கத் தெய்வத்
தமிழ்மண மிகுந்தோங்க அந்தாதி மாலிகை.
தவமண மிணங்கி யோங்கி
மருவோங்கு செங்குவளை மலரோங்கு சற்குரவர்
மதியோங்க மகித லமெலாம்
மகாமௌன மோங்கிநன் முத்தியின் போங்கிட
மகிழ்ந்தணிந் தோங்கி ஞானெண்
ணுருவோங்கு சகலகலை யுணர்வோங்க மதியோங்கி
யொளிர்ஞான மோங்கி மிளிரும்
உத்தமன் B. B. நாராயண ஸ்வாமியெனும்
உயர்வித்வக் கவிச்சிங் கமே. (௬)

திருநெல்வேலி வேணுவனக் குமரர் தெரு,
திருவாளர், காருடை, சு. சூரியமூர்த்திப்பிள்ளையவர்க
ளியற்றியவை.

### கலித்துறை.

சாலைக் குமரற்காம் அந்தாதி யாயோர்நூல் சாற்றினனே
மாலைப் பொழுதில் அவனடி போற்றி வரம்பெற்றவன்
நூலைப் பலவிசை யாக நுவன்றிடு நுண்ணறிவோன்
ஞாலப் புகழநா ராயண சாமிப்பேர் நாவலனே. (க)

நாரா யணசாமி நாயுடு மாமன் நலஞ்செய்தமிழ்ப்
பாரா யணங்கொள் பனுவலிற் சித்திரப் பாவினங்கள்
சீராய் விரவ அருண்மிளிர் ஞானஞ் சிறந்திலங்க
ஆரா அமுதின் அளிக்கவல் லானவற் கார்நிகரே. (உ)

தேவர்கள் நெல்லையற் போற்றியே பூமழை சிந்துதுறை
மேவிய மாமனைப் போல எவர்தாம் விரைந்துரைப்பர்
காவலர் யாப்பிற் கவினி லியலினிற் கண்டதெல்லாம்
மூவலர் தூவுமுன் பன்னூல் மொழியும் முதன்மையனே. (௩)

---

மதுரைத் தமிழ்ச் சங்கக் கலாசாலை ஆசிரியர்
உயர்திரு, சு. நல்லசிவன் பிள்ளையவர்க ளியற்றியவை.

### எண்சீர்க் கழி நெடி லாசிரிய விருத்தம்.

வாரணமுன் மூலமெனு முனமுன் வந்த
மாதவனைச் சீதரனை மனத்தெஞ் ஞான்றுந்
தாரணியிற் றுதித்திறைஞ்சு பத்தி சான்றோன்
றமிழ்ச்சலதி திளைத்துமகிழ் தரும சீலன்
சீரணியும் பொருநைபல வளனு நல்கு
சிந்துபூந் துறைநகரிற் சிறந்து வாழ்வோன்
ஏரணியும் பானுநா மப்பேர் வேள்செய்
யிருந்தவத்தார் பொருந்தலத்தி லினிது வந்தோன். (க)

எத்திசையும் புகழ்ந்திடுபோ லீசிற் சர்க்கி
ளினிஸ்பெக்ட ருத்யோக மெய்தி வாழ்ந்தோன்
உத்தமர்கள் புகழ்நாரா யணசா மிப்பே
ருற்றிடுசித் திரக்கவிஞ னுவந்து சொற்றான்
கொத்தவிழ்பூஞ் சோலைதிகழ்ந் திலங்குஞ் சாலைக்
குமரேச ரந்தாதி கொண்மூ நேரிவ்
வித்தகனூற் சொன்னயமும் பொருளி னோக்கு
மெய்ப்புலவர் செவிக்கினிமை விளைக்கு மாதோ. (உ)

---

திருநெல்வேலி டவுண், சிந்துபூந்துறை போலீஸ் பென்ஷன்
திருவாளர் K. V. போன்னப்ப பிள்ளையவர்க ளிபற்றியது.

வெண்பா.

பாலகனை யோங்கிசெழும் பத்தர்க் கருள்புரியுஞ்
சாலைக் குமரற்கந் தாதிதந்தான்—சீலமுயர்
நாரா யணசாமி நாவலவன் நானிலத்தோர்
பாரா யணஞ்செய்யப் பார்த்து. (க)

---

தோத்திரத் திரட்டு முதலிய நூல்களின் ஆசிரியராகிய
யாழ்ப்பாணம்
ஸ்ரீலஸ்ரீ, சுவாமி நித்தியாநந்த சரஸ்வதியவர்க ளியற்றியவை.

அகவற்பா.

தூயவெண் டரளம் நேயமோ டிலங்குஞ்
சேயவெண் சலசத் தாயவெள் ளனம்பல
கருவெனக் கொண்டு பரிவின்மீத் தழீஇயே
அடைகிடந் தஞர்ந்துள் ளுடைந்துடைந் தெழூஉங்
காட்சிகொள் தடம்பணை மாட்சிகொள் தண்டலை

அகழிழு தெயிலிவை புகழ்பெறச் சூழ்ந்தொளிர்
மாடமா ளிகையுங் கூடகோ புரமும்
பொன்னகர் தழூஉந் தொன்னக ராந்திரு
நெல்லையம் பதியின் மல்லலங் குணபால்
இலங்குதண் பொருநை துலங்கிடுஞ் செல்வச்
சிந்துபூந் துறையார் இந்துதோய் சாலைப்
பூந்தளி யோங்குஞ் சாந்தபூ ரணனுஞ்
செங்கதிர் வேலோ னங்கும ரேசன்
பிரணவச் சிலம்பார் சரணபங் கயத்தே.
மூவுல கும்புகழ்ப் பாவல ருங்கவிச்
சக்ரவர்த் தியெனும் உக்ரகெம் பீரனும்
சித்திரக் கவியர சுத்தம னெனமகிழ்
சீரார் B. B. நாரா யணசா
மிப்பெயர் பூண்டொளிர் ஒப்பறும் புலவோன்
அன்பெனுங் கரங்கொண் டின்பெழூஉ மிசையாம்
நார்கொடு நால்வகைச் சீர்மிளிர் தண்டமிழ்
மலரலங் கலினை நலமுறத் தொடுத்தே
சிவமணங் கமழவே நவவிதப் பத்தியாற்
பணிந்துவந் தருகியே யணிந்தன னம்மா!
கருணையே நிறைந்தயிவ் வருண்மொழிப் பனுவலை
அன்புடன் படிப்போர் இன்புடன் கேட்போர்
பிறவிப் பெருங்கடல் அறவொரீஇ மேலாம்
வேதாந் தப்பதி மீ[1] தாந்தத் துறாஉம்
பெற்றியை மரீஇயே நற்றவர்
புகழ்ந்திட சின்மயந் திகழ்ந்துவாழ் குவரே.

1. அந்தத்து = அழகுடன்.

சுபம்! சுபம்!! சுபம்!!!

சிறப்புப்பாயிரம் முற்றும்.

சர்வம் சிந்மயம்.

ஓம் தத் ஸத்.

# அவையடக்கம்.

---

## வெண்பா.

சாலைக் குமரன்புகழ் சாற்றலிவந் தாதிக்கண்
வேலைச் சுலவுலகின் மேவுநுண்மண்—வேலையற்றே
எண்ணவொரு [1]புன்கொதுகி சைந்ததொக்கு மென்றறிஞர்
[2]உண்ணவையா ராயா ருணர்ந்து.

1. புன்கொதுகு = புல்லிய கொசு, 2. உள் + நவை = உள்ள குற்றத்தை.

## இரதபந்தம்.




வெண்பா.

தெள்ளுற்றுட் சீரன்பெண் கல்விமெய்சொற் சீர்மைநன்னர்
வெள்ளமுயர் சாரமுள்ள மெய்ச்[1]செல்வ—[2]மள்ள[3]வெணீ
வேலைக்கு முந்துறு மிக்க கவலையா
சாலைக் குமரன்மென் றுள்.

1. ஞானச் செல்வம். 2. அள்ள் + எண் = அள்ளிக் கொள்ள எண்ணுவாயாக, 3. ஈவேலைக்கு = கொடுக்குந் தொழிலுக்கு மிக்க கவலையா முந்துறு.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ் ஜோதி

ஸ்ரீ சற்குருவே நம:



# சாலைக் குமரேசர் அந்தாதி.



## விநாயகர் காப்பு.

வெண்பா.

[1]ஆலைக் குமரனுக்கு மன்பார் [2]மருமானுஞ்
சாலைக் குமரேசர்க் கந்தாதி—மாலைநல்க
மெய்க்குஞ் [3]சரமுகத்தான் மேலவர்க ளேத்துபுழைக்
கைக்குஞ் சரமுகத்தான் காப்பு.

1. ஆல் + ஐக்கும் = விஷ்ணுவுக்கும் + அரனுக்கும் = சிவனுக்கும், 2. மருமானும் = மருமகனும் + மகனுமான, 3. குஞ்சரம் = உச்சிதமான + முகத்தான் = வேதத்தான்.

---

## நூல்.

கலித்துறை.

சாலைக் குமர! சகல வுயிரையுந் தந்தவுமைப்
பாலைக் குமர! வசுரர்த் திரளொடு பன்னருநோய்

[1]மாலைக் [2]குமர! தினைப்புனத் தேநீ டணைந்தவள்ளி
யாலைக் கு[3]மர புரைத்தவ! நின்சீர் வழுத்துவனே. (க)

1. நோய்மாலை = நோய்வரிசையை, 2. அர = கெடுப்பவ,
3. மரபு + உரைத்தவ.

வழுத்தவ [1]ளுக மிசைபவன் சாலை மயிலவ[2]னார்
பழுத்தவ ளுக வெனையவன் பான்மனம் வைக்கவலித்
திழுத்தவ [3]ளுக வணையோன் மருக னிசை யிருமூன்
றெழுத்தவ [4]ளுக மிசைக்க வணங்க[5]வெண் ணீகுவனே. (உ)

1. வல் + நாகம் = மலை, 2. நார் பழுத்த = அன்பு முதிர்ந்த,
3. நாகம் = பாம்பு, 4. நா = நாவும் + கம் = தலையும் வாழ்த்த
வும் வணங்கவும், 5. எண்ணத்தைக் கொடுப்பவனே.

ஈவா [1]னகமுண்ட மாயன் பதத்திற்கு மேற்றமுள
[2]மீவா னக[3]முண்ட கச்சாலை வேலன் விடவசுர
[4]மாவா னகமுண்ட கந்தனைச் சார வருளிமனோர்
[5]தேவா னகமுண்ட கந்தடிந் தான்றனைச் சேர்ந்தவர்க்கே. (ங)

1. நகம் = பூமி, 2. மீவானகம் = மேல் மோக்ஷம், 3. முண்ட
கம் = தாமரை, 4. மாவான் = மாமரமாகிய சூரனின் + அகம் =
மனமாகிய + முண்டகம் = தாமரையானது + தன்னைச்சார
அருளி, 5. தே = தெய்வத்தன்மையுள்ள + வான் = வானகம்
+ நக = நகைக்க + முண்டகம் = தலையை.

சேந்த! [1]வராக மணிமலி சாலைய! தெய்வமகள்
காந்த! [2]வராக முருவவேல் விட்டவ! [3]கான்மினுக்கே
மாந்த வ![4]ராக முடனேயிற் சொற்றிடு மாண்கவிக்கங்
காந்த வ![5]ராக முடனெனை யாளுங் கடனுனக்கே. (ச)

1. வராகமணி = பன்றி முத்து. 2. வராகம் = மலை, 3. கான்
மின் = வனப்பெண், 4. ராகமுடன் + நேயிற் சொற்றிடும் =
பண்ணுடன் பக்தியோடு சொல்லும் கவிக்கு, 5 ராகம் =
அன்பு.

[1]கடமா மலையா லடவியில் வள்ளி கலங்கவைத்தாய்
[2]தடமா மலையா லணிசாலை மேய சரவணனே!
[3]வடமா மலையா! வருத்தந் தருமென் மறுமையெனுந்
திடமா [4]மலையா வருங்காண வீர்குவை [5]திட்டிவைத்தே. (௫)

1. யானையாகிய மலை, 2. தடமா+பெரிய மாமரம்+மல்= வளப்பமுள்ள+ஐ=அழகுள்ள+ஆல்=ஆலமரம், 3. திரு வேங்கிட மலையனே, 4. அலை=இருளை, 5 திட்டிவைத்தே= அருட்கண் சாத்தியே.

வையம் [1]மடங்க வணங்குபைஞ் சாலை மயிலவ! தீ
வெய்ய [2]மடங்க லெனச்சீறித் தொண்டர்தம் மெய்யுயிரைக்
கொய்ய [3]மடங்க லணுகுங்கா லன்னவன் கொட்டமதை
[4]ஐய மடங்க விரட்டி யருளுவை [5]யாடுகைத்தே. (௬)

1. அடங்க=முழுவதும், 2. மடங்கல்=வடவாமுகாக்கினி,
3. மடங்கல்=நமன், 4. ஐய=ஐயனே+மடங்க=ஒருங்க,
5. ஆடுகைத்தே=ஆட்டு வாகனத்தைச் செலுத்தியே.

[1]ஆடுகைக் கண்ட மகத்துவீ ரேயழி யந்தணர்காள்!
[2]ஆடுகைக் கண்ட ரடைநதிச் சாலையை யாய்ந்துவினை
யாடுகைக் [3]கண்ட வறுமுகன் பொற்று ளடைமின் [4]மெய்வே
றுடுகைக் கண்ட யாவகை முத்தி யடைவதற்கே. (௭)

1. ஆடு+கைக்கு+அண்ட, 2. ஆடுகைக்கு=ஸ்நானத்திற்கு,
3. கண்ட=பார்த்து மகிழ்ந்த, 4. மெய்=தேகம்+வேறு டுகை+கண்டு.

[1]அடையப்ப னுனந்த மீபவன் சாலை யமர்ந்தவனால்
[2]அடையப்ப னுனந்த னன்[3]னைப் புரக்கக்கா னன்றுகுன்றால்
[4]அடையப்ப னுனந்த னன்கான் மருக னணிகடப்பம்
[5]அடையப்ப னுனந்த ரித்த விவைகொள் ளறுமுகனே. (அ)

1. அடைய=சேர+பன், 2. ஆலடை அப்பனுன்=சிவபிரா னின்+நந்தனன்=மகன், 3. ஆ+புரக்க, 4. அடைய=

ஒன்றுசேர + பனு = சொல்லா நின்ற + நந்தனன் + கால் = நந்தனன் மகனான விஷ்ணு, 5. அடை + அப்பல் = கடப்பந் தழைப்பொருந்த + நானம் = கஸ்த்தூரியணிந்து.

அறுகோடு கங்கை யணிந்தாற்குச் [1]சொற்சொலி [2]யாங்கொள் [செய்யிற்
[3]றுறுகோடு கங்கை நிகரவின் முத்தின் சுடரொளிவான்
[4]மறுகோடு கங்கை யிரவிமாய்ச் சாலை மருவிவெஞ்சூ
[5]ருறுகோடு கங்கை யிறுவேல்! நீக்கினி [6]யும்மையெற்கே. (கூ)

1. சொல் = உபதேசம், 2. ஆம் = நீர், 3. துறுகோடு = பொருந்திய சங்கு + கங்கை = தீப்பொறியை, 4. மறுகு + ஓடு + கம் = ஆகாயத்தில் + கை = ஒழுங்காயுள்ள, அல்லது ஓடு + உகம் + கை = கைக்கின்ற, 5. கோடு = கிளை + கம் = தலை + கை = கரம், 6. உம்மை = வருபிறப்பு.

எற்குத் [1]தரங்கப் பவநோ யிலைபிணி யென்னிசைபாச்
சொற்குத் [2]தரங்கப் பமைந்திடும் பண்ணிற் சொலித்துதிப்ப
தற்குத் [3]தரங்கப் பெருக்கம் புணருந் தரமுடனே
[4]மற்குத் தரங்கப் பனிச்சாலை வேளை வணங்கவினே. (ய)

1. தரங்கம் = கலக்கமுள்ள, 2. தரம் + கப்பு, 3. தரங்கம் = கடல்போன்ற + பெருக்கம் = செல்வம், 4. மல் + குத்து + அரங்கம் + இடங்களையுடைய.

வண்ணத் தனத்தை மறைக்க வயர்த்தனள் [1]மாழையிற்செய்
கிண்ணத் தனத்தை யயில்கிலள் சாலைக் கிழவவெண்முக்
[2]கண்ணத் தனத்தை யெனவே கரைகுவள் காமனெய்த
[3]புண்ணத் தனத்தை மயறீர்த் தணைவையிப் போதினிலே. (யக)

1. மாழை = பொன், 2. முக்கண் + அத்தன் + நத்து + இச்சிக்கின்ற + ஐ = சுவாமி, 3. புண்ணத்து = புண்ணையுடைய + அனத்தை = அன்னம்போன்றவளை,

இனியம னுக்கு மிலக்குமி நாத னெழில்கொளுந்தி
[1]சனியம னுக்கு மிலைபயஞ் சாலை தனில்வனத்துக்

[2]கனியம னுக்கு வழிப்பட் டடியர்கள் காவென[3]வோந்
தொனியம னுக்கு நலனருள் வேலென துண்ணிற்கவே. (௧௨)

1. சனி=பிறந்த+அ+மனுக்கும்=அரசனை பிரமனுக்கும், 2. கனி=குறவரின் கன்னியாகிய+அம்மனுக்கு=அம்மனாகிய வள்ளிக்கு, 3. ஓம்+தொனி+அம்+மனுக்கு=விண்ணப்பத்திற்கு, தொனிய=தொனியுள்ள வெளிநுமமையும்.

நிற்கலங் கார மிழைக்குநர் தொண்டு நினைந்துசெய்வார்
[1]பொற்கலங் கார முடனளிப் பார்பொன் பொலியுநவ
[2]நற்கலங் கார வழங்குன்ர் சண்ட னணுஞ்சமயத்
திற்கலங் காரது சாலைக் குக!நின் றிருவருளே. (௧௩)

1. பொன்+கலம்+காரம்=அச்சம், 2. நல்+கல்=இரத்தினம்+அங்கு+ஆர=நிறைய.

அருள மலைத்தன வள்ளியொ டென்புன்கண் தாளுவையே
மருள [1]மலைத்தன முட்செலா தாக மடிதருண
மிருள [2]மலைத்தன லேய நமன்றுன் பிழைக்குமுனந்
[3]தெருள மலைத்தன துள்ளெனுஞ் சாலை திகழ்குகனே. (௧௪)

1. மலைத்து=தடுமாறி, 2. மலைத்து=பொருது, 3. தெருள்+அமலை = இலக்குமி + தன=தனது + உள்ளெனும்=இருப்பிடமெனும்.

[1]குகனய மென்று வனமின் னளிதினை கொண்டயில்வோன்
[2]மிகனய மென்று சவரியி னெச்சிலுண் விண்டுமரு
[3]மகனய மென்றுணர்ச் சாலைக் குமரன் வணங்குநர்க்குச்
[4]சுகனய மென்று மளிப்ப னவனைத் துதிமனமே. (௧௫)

1. குகன்=வேலவன்+நயமென்று, 2. நய=நைய+மென்று=சுவைத்து, 3. அயம் = அலரி+மென் = மெல்லிய+துணர்=மலர், 4. சுகம்+நயம்=மிகுதியாக+என்றும்=எப்போதும்.

[1]மனமாலை யத்தை யுறக்கடைக் கண்ணெனும் வாளியினால்
[2]கனமாலை யத்தை யடைசாலைக் கந்தன் [3]கடத்தியென்ற
[4]னனமாலை யத்தை நகையுறச் செய்தன னன்னவன்பூண்
வனமாலை [5]யத்தை யொழித்திடு மம்மை வழங்குவீரே. (௧௬)

1. மனமயக்கம் பெருக, 2. கனம் = பெருமை + ஆலயத்தை, 3. கடத்தி = செலுத்தி, 4. அனம் = அன்னம்போன்றவள் + மாலை = மாலையில் + அத்தை = மாமி, 5. அத்தை = அதை.

வழக்க[1]மற் றாகம வாறென் றுயிரை வதைத்துணுந்தொல்
பழக்க[2]மற் றாகம மன்னைபோற் கொள்ளும் படியியல்பாம்
புழக்க[3]மற் றாகம னத்தருள் வாயெண் புலவரிசை
முழக்க[4]மற் றாகம டைந்துசெய் சாலை முருகையனே. (௧௭)

1. ஆகமவிதியின் வழக்கப்படி + ஆக + ஆறு, 2. அற்று = நீக்கி + ஆகமம் = ஞானம், 3. மற்று = அசை, 4. மல் = பெருக + தாகம் = ஆசை.

முருக! [1]மதியா தவருக்கெட் டாத முதன்மைபதந்
தருக மதியா தவருக்கெட் டாதிடைத் தாயர்மனை
முருக [2]மதியா தவற்கு மளிசெய் துலகையுண்டோன்
மருக! [3]மதியா லடைந்தேற்குச் சாலை மயிலவனே. (௧௮)

1. மதி + ஆதவருக்கு = சந்திரன் சூரியனுக்கு, 2. மதி + ஆதவற்கும் = இடையனைத் திபாண்டனுக்கும், 3. மதியால் = விருப்பத்தால்.

மயிலவ! தார முபய முடையவ! வானுமெனு
[1]மயிலவ தாரமதையிரண் டான்மரு மானெனவையம்
[2]மயிலவ! தார மலிந்திடு சாலை வரத! தெய்வ
[3]மயிலவ! தாரக நீயன்றி யாரெற்கிம் மாநிலத்தே. (௧௯)

1. மயில் = குற்றமில்லாத + அவதாரம், 2. மய் = ஆடு + இல்லவ = இடமாகவுடையவ + தாரம் = தேவதாரம், 3. மை = நீல நிறமுள்ள + இல்லவ = மனைவியையுடையவ.

திலத்தலை [1]யாக மடையுமுன் பேதை நினதுபுயங்
கலத்தலை [2]யாக மருள்னின ளாலவள் கண்களிக்க
[3]வலத்தலை யாக னவேலை யணிந்திமே வந்தணைவாய்
[4]திலத்தலை யாக மிழைசாலை வேலவ! சிந்தம்வைத்தே. (உ௰)

1. ஆகம்=உடல், 2. ஆகமம்=சேருதல், 3. வலத்து=வலதுபக்கம்+அலையா = அலைகின்ற, 4. திலம் = எள்+தலை=சிறந்த.

சித்தத் திசையு[1]மை யாரென் றயிர்வீர் தெரிந்திடுவீர்
மொத்தத் [2]திசையு மிடர்செய்த சூரனை முன்புகொன்று
வித்தத் [3]திசையுறு சாலை மருவி விரும்புநர்க்குப்
பத்தத் [4]திசையு [5]மமுத மளித்திடும் [6]பாவகியே. (உக)

1. ஐ=கடவுள், 2. திசை=திக்கு, 3. இசை=கீதம், 4. இசையும்=பொருந்தும், 5. அமுதம்=மோக்ஷம், 6. பாவகி=குமரன்.

[1]பாவிக்கப் பாவம் மகத்த நியாயம் பணியருமை
[2]யாவிக்கப் பாவ தமதை வெறுக்கு மறுமுகன்வாழ்
[3]காவிக்கப் பாவ மலிந்தநற் சாலையைக் கண்களிக்கச்
சேவிக்கப் பாவ மறுமனமே யங்ஙன் செல்குவையே. (உஉ)

1. பாவிக்க = பாவனைசெய்து +, பாவம் = அக்கிரமமாக 2. ஆவி=உயிர்+கப்பு=பொருந்திய+ஆ=பசு+வதமதை=வதைத்தலை, 3. காவி=குவளைக்கொடி+கப்பு=கிளையுடைய+ஆவம்=குங்கும மரம்.

[1]செல்லலைத் தண்டலைச் சாலைக் குமர! திதிமைந்தரின்
[2]சொல்லலைத் தண்டலைச் செய்த வயில! வென் சூழ்வினையைக்
கெல்லலைத் [3]தண்டலைச் சார்ந்த கடம்பவ! கிட்டென்சன்ம
[4]வல்லலைத் [5]தண்டலை யாகிக் கடத்துந லன்புவைத்தே. (உங)

1. செல்=மேகம், 2. சொல்=புகழ்+அலை=ஏந்திய+தண்டு=சேனையை+அலைச்செய்த=வருத்திய, 3. தண்+தலை, 4. அல்+அலை==இருட்கடலை, 5. தண்டலையாகி=மீகாமனாகி.

[1]அன்பனைத் தானருள் செய்திடச் சாலை யமர்ந்தமரர்
[2]துன்பனைத் தானன மின்புறச் சூரற் றொலைத்தவர்க்கெண்
[3]ணன்பனைத் தான விருப்பி னிழைத்த நளினவள்ளி
யின்பனைத் [4]தானக மேவவைத் தேபிறப் பீருவமே. (உச)

1. அன்பனை+தான், 2. துன்பம்+நைத்து+ஆனனம்=முகம், 3. நண்பு+அனைத்து+ஆன, 4. தான்=மாத்திரம்.

ஈராறு [1]கண்டல னோராறு சென்னிய னெண்பொருளை
யோராறு [2]கண்ட லணிசாலைக் கந்தனு மாபதியோர்
[3]தேராறு கண்டல கில்லாச்சொற் சொற்குகன் சீருறுதாள்
[4]சேராறு [5]கண்டலர் சொன்மாலை கொண்டவற் றேருவதே. (உரு)

1. கண்+தலன், 2. கண்டல்=தாழை, 3. தேர்+ஆறு=வழி+கண்டு, 4. ஆறு=உபாயம், 5. கண்டு=கற்கண்டு போன்ற, 6. அலர்சொன்மாலை=தமிழ் மலர்மாலை.

[1]தேரா தவனை நிலத்தை யுடுக்களைத் தெண்டிரையைப்
[2]பேரா தவனைய மீத்தெவை யுண்மாற் பெறுமக[3]னே
மோரா தவனையக் குட்டிடு சாலை யுறுகுகனைச்
சேரா தவனை யணுகு[4]மே மோக்கமுஞ் செல்வமுமே. (உசு)

1. தேர்=தேரையுடைய+ஆதவனை=சூரியனை, 2. பேர்+ஆதவம்=ஒளி+நயம்+ஈ+தெவை=சந்திரனை, 3. ஓம்+ஓராதவனை=பிரமனை, 4. ஏ=எதிர்மறை.

[1]செல்வந் தனையளி சாலைக் குகனை திருத்தொண்டர்க்குச்
செல்வந் தனை[2]யளி நல்கும் புலவரெண் டெய்வமினார்

[3]செல்வந் தனையளி மான வறுமையைச் சேதிக்கும்[4]வான்
செல்வந் தனையளி யன்மகார் பெற்றபின் றிண்மையினே, (௨௭)

1. செல்=சென்று, 2. அளி=அள்ளி, 3. செல்=மேகம்+வந்து+அனை = அன்னையின்+அளி = கிருபை, 4. வான் செல்வம்=மோக்கமுறுவோம்+தனையள்+இயல்மகார்.

திண்ணக்கைக் [1]குஞ்சர வீட்டமண் சாலைத் திருக்குக! பூ
வண்ணக்கைக் [2]குஞ்சர மன்மத னேவ மதிமயங்கி
[3]யுண்ணக்கைக் குஞ்சர மாத ரிடைக்கொண் மயலொழித்துள்
ளெண்ணக்[4]கைக் குஞ்[5]சர மத்திசைப் போழ்தஞ்ச லென்றருளே. (௨௮)

1. குஞ்சரம்=யானை+ஈட்டம்+அண், 2. கைக்குஞ்சரம்=ஒழுங்கான பாணம், 3. உள்+நக்கு=சிரிக்கு+ஐ=அழகிய+குஞ்சர=உச்சிதமான, 4. கைக்கும்=வெறுக்கும், 5. சரம திசை=நிரியாண காலத்தில்.

[1]தன்றலைக் கந்த மமர்குன்று தோறுந் தரிக்குகா!
[2]மன்றலைக் கந்த பருவத! சாலை மயிலவ! சந்
[3]துன்றலைக் கந்த மறவொழித் தின்றுன் றுணையிணைத்தா
[4]ளென்றலைக் கந்த முடன்வைத் தருள்க வினிதுவந்தே (௨௯)

1. தன்+தலை=தன்மீது+கந்தமமர்=வாசனைபொருந்திய 2. மன்=நிலைபெற்ற+தலை=சிகரமுள்ள+கந்தபருவத=கந்தமாதன மலை, 3. சந்துன்று அலை=பிறவியிருளை+கந்தம்=மனோ வாசனை அல்லது அணு, 4. தலைக்கு=சிரசினுக்கு+அந்தமுடன்=அழகுடன்.

வந்தனைக் [1]கண்ணன் மகிழ்ந்தன்று கான்வரு வண்ணஞ்செய்து
முந்[2]தனைக் கண்ணன் கயில்பெற்றுச் சூரை முறுக்கியநங்
கந்தனைக் கண்ணன் மருகனைச் சாலைக் கடம்பனையெண்
சிந்தனைக் [3]கண்ணன் பனைப்பேணிற் சேருந் திருவெதுமே. (௩௰)

1. அண்ணன் = கணபதி, 2. அணை = தாய் + கண் = இடம் + நன்கு, 3. அண் = பொருந்து + அன்பனை.

திருப்பரங் குன்று பழமுதிர் சோலைச்செந் தில்விலஞ்சி
[1]யிருப்பரங் குன்று வயிரத் தருச்சே ரெழில்கொளொவ்வோர்
பொருப்[2]பரங் குன்று டியர்சாலை வேலர் புலவர்பின்பால்
விருப்ப[3]ரங் குன்றணை யாவர்நெஞ் சேதுதி விள்ளுகவே. (௰௧)

1. இருப்பு = இரும்பு + அரம் + குன்றும் = நாணும், 2. அரங்கு + உன் = உன்னுகின்ற = அடியர் = குமரனுடலைச் செய்தவர். 3. அங்கு + உன் = உனது,

[1]விள்ளக் கவிசிந்து தேங்கனி நேர மிகருசிக்க
மெள்ளக் [2]கவிசிந்து செப்பும் வரத்தை விருப்பினல்காய்
[3]எள்ளக் கவிசிந்து நெல்லாதி தம்மை யினிதளிக்குந்
தெள்ளக் [4]கவிசிந்து [5]செம்பாற்றுச் சாலைத் திருக்குகனே (௰௨)

1. விள்ள = வேறுபடக் + கவி = குரங்கு, 2. கவிசிந்து = சிந்துக்கவி யென்னும் பாடலை, 3. எள் + அக்கு = அகில் + அவி = ஆடு + சிந்து = இருவாட்சி, 4. கவி = கவிக்கின்ற + சிந்து = புனலையுடைய, 5. செம்பு + ஆறு = தாமிரவருணி.

[1]திருக்கு வளைக்கு ளளியனுஞ் சாலைச்சேய் சேர்கிலனே!
[2]கருக்கு வளைக்கு ளுதித்த கடமுனி கையடங்கு
[3]முருக்கு வளைக்கு முவரே! நின் கண்முத் துதிர்த்துகர
மிருக்கு [4]வளைக்கு ழுகுத்தூரங் காயின் றிரவுநன்கே. (௰௩)

1 திரு + குவளை = குவளை மலர், 2. கரு = யந்திரத்திற் செய்த + குவளை = பாண்டம், 3. உரு = பெரிய + கு = பூமியை + வளைக்கும் + உவரே = கடலே, 4. வளைக்குழு = வளையலினம் + சங்கினம்.

இரங்கத் தனித்தனி யெய்திநி கின்ற விடுக்க[1]ணவை
யரங்கத் தனித்த வழியை யெதனு லடைகுகிற்பீர்

குராங்[2]கத் தனித்த விளையாடு சாலைக் குமரனைவாய்
சிரங்கத் [3]தனித்தனெனச்சொல்லித் தாழாத் தெளிவினரே(௩௪)

1. அவை = கூட்டம்+அரங்க = ஒழிய+தனித்த=ஒப்பற்ற, 2. அத்தம்=வழியில்+நித்தம், 3. கத்தன்+நித்தன்.

தெள்ளத் தெளிய வறிவடைந் தேயொளிர் சீரியர்க
ளுள்ளத் [1]தெளிய வொயினடை மாத ருரகவிடைப்
பள்ளத் தெளிய வணுவிழு வேணைப் பரிந்தளிப்பாய்
வெள்ளத் [2]தெளிய னுடன்வளர் சாலையுள் வேலவனே. (௩௫)

1. எளிய=இகழ்ந்த, 2. எள்=எள்ளு+இயனுடன்.

[1]வேலைய னாரண னின்மரு மான்றொண்டர் வேண்டுவசெய்
[2]வேலைய னாரண னேங்கொளச் சொற்றவன் வீழ்கருணை
[3]வேலைய [4]னாரண மேலவன் சாலை விசாகன்மரி
[5]வேலைய னாரண வாற்றுவன் றன்மேல் விரும்பினர்க்கே, (௩௬)

1. வேல்+ஐயன், 2. வேலையன் = தொழிலையுடையவன். 3. கருணைவேலையன்=கிருபாசமுத்திரன், 4. ஆரண மேலவன்=பிரணவ சொரூபன், 5. மரி வேலை=சாகுங் காலம்+அம்+நார்=அன்பு+அண=பொருந்தகிருபை செய்வான்.

விரும்பாத [1]கஞ்ச னசடன் சினத்தன் வெறியனரு
ளரும்பாத [2]கஞ்சந னம்பினி னேகொள் ளறிவிலெற்கே
[3]பெரும்பாத கஞ்சகத் தோய்ச்சாலை வேலவ! பேண்சிலம்ப
[4]திரும்பாத கஞ்ச மளித்தருள் செய்குவை சிந்தைவைத்தே.(௩௭)

1. கஞ்சன்=உலோபி, 2. கஞ்சநன்=மன்மதன், 3. பெரும்பாதகம்+சகத்து+ஓய்=மாய், 4. சிலம்பு+அதிரும்.

சிந்திக்க [1]வாறு வரவரி கொண்டவன் றெண்பொருநைச்
[2]சிந்திக்க வாறு சுலவுறு சாலைத் திருக்குமர

[3]னந்திக்க வாறு பிரணவஞ் சொற்றவ னுன்முகன்ம
[4]னந்திக்க வாறு நலத்தே நவின்றவ னந்துணையே. (௩௮)

1. ஆறுவரவரி = ஆறுமேலான எழுத்து + ஆறக்கரம், 2. சிந்து = நீர் + இக்க = கரும்பு போன்ற + ஆறு = பொருனை நதி, 3. நந்திக்கு = சிவனுக்கு + அவ்வாறு, 4. மனம் + திக்க + ஆறு = ஒழுக்கமிகுந்த வேதத்தினுட்பொருளை.

துணையா [1]வலலை முலைகுழல் வள்ளி துணையவனுக்
கிணையா [2]வலலை யொழிப்பவ னில்லையென் றேயவன்றாட்
[3]கணையா வலலை யமங்கொளிப் பேதை களவினினை
யணையா [4]வலலை யெனவுரை சாலை யமரனமே. (௩௯)

1, வல் = சொக்கட்டான் காய் + அல்லை = இருளை, 2 அலலை = அல்லலை, 3. கண் = இடம் + ஐயா + வல் = அழகான கச்சு + அலை + அமம் = அசையும் முலை, 4. ஆவல் = ஆசையை + அலை = ஒழியென

குருகு [1]வயத்த வயல்கோலு சாலை குலவிமன
[2]முருகு வயத்த சூரமனைக் கொன்ற முருகனெறி
திருகு [3]வயத்தறி வில்லார்க்குஞ் ஞானந் தெரிந்தளித்துள்
ளுருகு [4]வயத்தனு மாவனெணித்துதி யுத்தமர்க்கே. (௪௰)

1. வயத்த = நீரிடமாகவுள்ள, 2. முருகு = எழுச்சியுடன் + வயத்து = வெற்றியுற, 3. வயத்து = வையத்து, 4. வயத்தனும் = வசத்தனும்.

உத்திய வாக்குவித் தார வெனவே யுலோபர்தமைக்
[1]கத்திய வாக்குவித் தாரக் கவிசொல் கசட்டு நெஞ்சே!
சத்திய [2]வாக்குவித் தாரரண் சாலைத் தளிக்குகனை
நத்[3]திய வாக்குவித் தானைத் துதிநற் கவிநவின்றே. (௪௧)

1. கத்தி + அவாக்குவித்து + ஆர, 2. சத்திய வாக்கு = உண்மை + வித்தாரர் + அண் = பொருந்திய. 3. நத்து = விரும்பும் + இயவு = புகழ் + ஆக்கு + வித்தானை.

[1]கவித்தானை யால மருஞ்சாலை வேளைக் கனிந்தெச்சிலைக்
[2]கவித்தானை யால மரக்கந்த சாமிக் கவிக்கிரங்கி
புவித்[3] தானை யால வருசூரன் றன்னைப் [4]புலவருய
வவித்தானை [5]யால மபிடேகஞ் செய்யினன் கண்ணுவமே. (௪௨)

1. கவித்தானை = குரங்குக் கூட்டம், 2. கவி = கவிந்த + தானையால் = தூசால் + அமர = அமர்த்தி, 3. தானை = சேனைகள் + ஆல = ஒலிக்க, 4. அமரருய்யும்பொருட்டு, 5. ஆலம் = நீர்.

[1]அண்ணலை யங்க முருகப்பண் பாடியே யாடிடற்கு
பண்ணலை [2]யங்க மணிந்துநற் பூசையைப் பத்தியொடு
தண்ணலை [3]யங்க முறுநதிச் சாலையண் சாமியையே
[4]புண்ணிலை யங்க மலைவினை யெவ்விதம் போக்குவையே. (௪௩)

1. அண்ணலை = நெருங்கவில்லை, 2. அங்கம் = சிவச்சின்னம், 3. அம் + கம் = நீர், 4. புண் + நிலை + அங்கமலைவினை = சரீர துக்கத்தை.

போக்க வரிய மயலினுற் றென்றற் புலியதுபோற்
றூக்க வரிய முலைமனஞ் சோர்ந்தா டவிர்த்ததனை
நீக்க வரியனி காள்! சாலை வேட்கண் ணிகழ்த்தியுளம்
பூக்க வரி[1]யமம் விம்மப் [2]புலக்[3]கொடு போதுமினே. (௪௪)

1. அமம் = ஸ்தனம், 2. புல = புல்ல, 3. கொடுபோதுமினே = கொண்டுவந்து சேருங்கள்.

[1]போதர விந்த மணியரான் சேயெனப் போந்துகுள
மீதர விந்த மிளிர்சாலை மேயவன் மென்பதமே
பூதர [2]விந்த வினைதீர்த் தமுதம் புரந்திடும்வே
றூதர விந்த வவனியி லில்லை யறிமின்களே. (௪௫)

1. போது = மலர் + அரவு + இந்து + அம் = கங்கை, 2. விந்தம் = பருவதம் போன்ற.

[1] அறிவழி யாதவ னண்டரீச் சாலை யயிலவனை
யறி[2]வழி யாதவ மன்னுந் திருப்புக ழன்புடனைம்
பொறிவழி [3]யாதவ னண்ண விடாது புகலலைது
[4]பொறிவழி [5]யாதவ காசத்துச் சேர்க்கும் பொலனுறவே (௪௫)

1. அறிவழி = கள் + ஆதவன் + அண் + தரு + ஈ = கொடுக்கின்ற. 2. வழி = அறியும் உபாயம் + ஆதவம் = அருளொளி 3. யாது + அவமும், 4. பொறி + ஞானச்செல்வம் + வழியாது = நீங்காது, 5. அவகாசத்து = விரும்புங் காலத்தில்.

பொலனுகத் [1]தாரைக் கடம்பதாக் கொண்டவன் பொற்புகொழு
தலனுகத் [2]தாரைப் புயல்விடு சாலையைச் சாருகுகன்
[3]கலனுகத் தாரைப் புனையரன் சேய்பேர் கழறுகிலார்
[4]வலனுகத் தாரை யிருகோடி [5]கும்பி மருவுவரே. (௪௭)

1. தாரை = மாலையை, 2. தாரை = மழைத்தாரையை, 3. கலன் + ஆகத்து + ஆரை = ஆத்திமாலையை, 4. வல + நாகத்து = வலிய நாகம் + ஆர் = நிறைந்த + ஐ = ஐந்து, 5. கும்பி = நரகத்தில்.

மருவா ரணமு டனுநூல் களுங்[1]கெழு மல்லென்பயன்!
கருவா ரணமு [2]பயமுஞ்சேர் சாலை கனிந்துறைந்தெண்
ணொருவா [3]ரணமு மயிலுங் கொடி[4]வய முற்றவனை
[5]மருவா ரணமு ணயிற்கரச் சாமியை வாழ்த்தின்றியே. (௪௮)

1. கெழுமல் = கற்றல், 2. அயம் = குதிரை, 3. வாரணம் = கோழி, 4. வயம் = வாகனம், 5. மருவார் = பொருந்தாதவர் + ரணம் + இரத்தம்.

வாழுமின் [1]கான விருக்கமண் சாலை வயின்மனத்தே
ஆழுமின் [2]கான மலிகவி சொல்லி யவன்பத்தியில்
தாழுமின் [3]கான வரிவை மணாளன்பொற் றாளிணையிற்
சூழுமின் [4]கான லவிரென்று தோயவன் றூய்த்தளியே. (௪௯)

1. கானவிருக்கம் = பாதிரிமரம், 2. கானம் = இசை, 3 கானவரிவை = வள்ளி 4. கானல் = ஒளி + அவிர் + என்று = சூரியன்,

தளியி[1]லங் கைமா மரஞ்செறிச் சாலை தனிலமர்ந்தெண்
ணளி[2]யிலங் கைமா வசுரமன் றன்னை யழித்தவனே!
யொளியி[3]லங் கைமா மலரைத் தொழுதுன் னுறுதியினைத்
தெளி[4]யிலங் கைமா நெலிக்கனி யாகுவை திண்ணமிதே. (ருய)

1. இலம் = வீடாகவுள்ள + கை = ஒழுங்காயுள்ள + மா = பெரிய, 2. அளி = வண்டு + இல் = இல்லாத + அம் + கை = கைக்கக்கூடிய + மா = மாமரமான 3. இலங்கு + ஐமா = கால் 4. தெளியில் = ஆராயில் + அங்கை = உள்ளங்கை.

திண்ணம் பொலிந்தவீ ராறு புயங்களுந் தெண்மதியின்
வண்ணம் பொலிந்தவோ ராறு முகங்களும் வாசமிகு
சுண்ணம் பொலிந்ததோர் கண்டல்சேர் சாலை சுவாமியென
தெண்ணம் பொலிந்தெந்த நாளினு நிற்கு மினிதமர்ந்தே. (ருக)

[1]இன்னிய றோலிசை வள்ளிதெய் வானை யிருபுறமு
மன்னிய சீரொ டரவுவாய் மஞ்ஞை வயத்தின்மிசை
துன்னிய வானவர் சாலையிற் சூழ்ந்து துதிசெய்திட
[2]நின்னய வேலொடு [3]நின்னிலை யென்கண்ணி னீங்கிலதே. (ருஉ)

1. இன் + இயல் + தோல் + இசை = இனிய சொல்லினையுடைய 2. நின் + நய 3. நில் + நிலை = நிற்கின்ற நிலை.

[1]நீங்காக் கருணை பொழியுமீ ராறு நிகழ்த்தநின்ற
பூங்கார் விழிகளும் கைகளும் வாய்மலர்ப் புன்னகையும்
பாங்கா வடியவர்க் காரருள் செய்பொற் பதவிணையும்
[2]தேங்கா றருநிறைச் சாலைக் குமரவென் சிந்தைநின்றே. (ருங)

1. நீங்கா = விற்பூட்டு 2, தேம் + கால் = ஒழுகும்.

சிந்திக்கத் தக்க குமரன் மகிழ்ந்து திகழுமிடம்!
வந்திக்கத் தக்க மதனும் வணங்கு மகிமையுறு

பந்[1] திக்கத் தம்ம முரைவாய் நடஞ்செயும் பாவையர்சூழ்
தந்[2] திக்கத் தண்ட மிசைசெலும் பாளையச் சாலையதே. (௫௪)

1. பந்து + இக்கு + அத்து + அம்மம் = ஸ்தனம் + உரை = சொல் + அத்து = சிகப்பு 2 தந்தி = யானை + கத்து = பிளிறல்

சாலைப் பரன்சேய் மகிழ்ந்துசேர் மின்னார் [1] தகையுணரிற்
சேலைப் பழிவிழி பொன்மெய் மதிமுகஞ் செந்துவர்வாய்
நூலைப் பழியிடை கன்ன[2]கில் வின்னேர் நுதல்செல்குழல்
பாலைப் பழிமொழி புன்னகை கஞ்சம் பதவிணையே. (௫௫)

1, தகை = அழகு 2 நகில் = ஸ்தனம்.

இணையிலா நன்னடை சோதர தத்துவ மேன்றுபிற
ரிணை[1]யிலா ளாசை தவிர லுயிர்கள்பா லன்புறுதல்
துணையிலார்க் கென்று முதவி புரிதலுந் துன்னவருள்
பணையி[2]லாக் கொள்கிந்து பூந்துறைச் சாலைப் பதிக்குகனே. (௫௬)

1. இல்லாள் = மனைவி 2. இல்லா = இடமாக,

குகைவாய் வகிர்வேற் குமரனைச் சாலையிற் கூடுகிலீர்
[1]நகைவாய் நகர்நா டரசா ளிறைவரும் நாடிழந்து
பகைவா யரசர்வாய்ப் பட்டே யவர்க்குப் பணியிழைத்து
[2]தகைவா [3]யலரரி தாச்சிறைப் பட்டதன் மைகண்டுமே. (௫௭)

1. நகைவாய் = மகிழ்ச்சி பொருந்திய 2. தகைவாய் = தாக மிகும் வாய்க்கு 3. அலர் = நீர் + கிடையாது.

கண்ட மருந்து கொடுத்தென் பயனிதோ காமனம்பு
கொண்ட [1]மருந்துகைக் கேவந் தன[2]ளிக் கொடியடியார்
பண்ட மருந்துதற் கீவரண் சாலைப் பதிக்குக![3]மின்
[4]எண்ட மருந்[5]துளங் காதவா றுய்ய[6]நீ றின்றுநல்கே (௫௮)

1. அமர்உந்துகைக்கே = போர்செய்வதற்கே 2. இக்கொடி = இத்தலைவியும் 3. மின் = தலைவியின் 4. எண்தமரும் = எண்ணுகின்ற சுற்றத்தாரும் 5. துளங்காதவாறு = கலங்காதவண்ணம் 6. நீறு = திருநீறு + கொடுங்கள்.

கலந்தா னிலாதபுன் சண்டாள ரென்னினு மடியுனை
வலந்தாங்கு சாலைக் குமரனே யென்று வழுத்தினர்[1] தாள்
பலந்தா னெனுமுத்திப் பேற்றை யடையப் பரிவுடனே
புலந்தா னுறமென் சிரசினில் வைத்தே பொலிகுவனே. (௫௯)

1. தாள் = பாதமலரை.

பொலிவுறு பார்ப்பன ரேனுநற் சாலைப் புனிதவுனைக்
கலியற மேலுங் கதியுற நாடிக் கருதிலரேல்
எலியையும் [1]பவ்வீ யுணும்பன்றி யுந்தினு மீனரிலும்
மெலியவ ரென்ன விகழ்வளிதே தென்றன் விருப்ப[2]மன்றே. (௬௦)

1. பவ்வீ = மலம், 2. அன்றே = அசை.

விரும்பாத கன்ம மிழைப்பவ னானினை மென்றுநின்னும்
பெரும்பாத கன்பொய னாணிலா வேழைகள் பேரிலரு
ளரும்பாத கன்மன னாயினுஞ் சாலை யயில!நின
[1]திரும்பாத கஞ்ச மளித்தருள் செய்நினைத் தேர்வதற்கே. (௬௧)

1. இரும் = பெரிய.

தேராது முன்செய்த தீவினை யோடுபின் செய்வினையும்
வாராத வண்ணமு மக்களும் ஞானமும் வானவர்க்குஞ்
சேராத செல்வமுஞ் சேர்ந்திடச் சென்று தெரிசித்திடீர்
ஆராத காத லுடன்சாலை வேற்கொள் ளழகனையே. (௬௨)

அழகனை யன்ப ரவத்தையில் வந்தரு ளத்தனைநங்
குழகனை சாலைக் குமரனை வேலனைக் [1]கூட லுயர்
கழகனை யாதரத் தேத்திடிற் சேய்பாற் கனிந்தவன்பு
பழ[2]கனை யாவருள் செய்குவ னீதவன் பண்பதுவே. (௬௩)

1. கூடலுயர் கழகனை = மதுரை தமிழ்ச் சங்கத்தனை
2. பழகு + அனையா + அன்னையாக,

பண்ணுறு தென்[1]றமிழ்ப் பேராவி மெய்யாப் பகர்வரியோ
டெண்ணுறு மோமந் திரமுஞ் செறிந்திங் கிசைதரலால்

விண்ணுறச் சூரனை வீய்த்தவ! சாலை விமல! மண்ணின்
கண்ணுற ²வெஃகினை யவ்விருப் பெற்குக் கனிந்தருளே. (௬௪)

1. தமிழ், என்னும் பெயர் "தமிழு" என்பது பொருள் இது அ–இ–உ. என உயிரெழுத்துக்களுக்கும் த்–ம்–ழ் என மெய்யெழுத்துக்களுக்குமாகி "ஓம்" என்பதாயிற்று. ஆகையால் 2. தமிழுக்கு ஆசைகொண்டு உலகத்திற்றோன்றினை.

கனிவாய் விடைநல்கு சாலைக் குமர! கவிஞருனைத்
தொனிவாய் திருஞான சம்பந்த னென்றிவண் சொல்லலென்?னம்
முனியே கழுமலப் பாவினிற் பெற்று முகந்ததுகந்
தனையே யெனவும் பிரித்துரை தந்ததுந் தாமுணர்ந்தே. (௬௫)

தாமவ னாகக் கருதிடுந் தொண்டரண் சாலைமன்னி
யாமவ ¹னாகந் தொறுமுறை யென்றுரை யாறுமுக
ஞமவ ஞ²ந்தக மென்னி விருத்தலி ஞமவெவ்வே
³லேம?வ ஞந்தர மேருக வின்றே விறப்பையன்றே. (௬௬)

1. நாகம் = மலை + தொறும் = தோறும் + உறு + ஐ = இறைவன், 2. வல் + நாந்தகம் = வாளாயுதம், 3. ஏம = இயமனே.

இறப்பு வருவது மிவ்வுட னீங்கி யினிப்பலவாம்
பிறப்பு வருவது மவ்வவர் செய்யும் பிணிவினையால்
மறப்பும் நினைப்பு மறநின்ற வுள்ளம் வழங்கின்மணச்
சிறப்பு மலிசாலை கந்த! பிறவிச் சிதையறுமே. (௬௭)

சிகைத்தோகை மஞ்ஞை யுலவிடுஞ் சாலைத் திருக்குமர!
நகைத்¹தோகை செய்திடு மைந்து புலன்வழி நண்ணலின்றி
பகைத்தோகைத் தோவதை நீக்கினன் ஞானத்தைப் பற்றமன
முகைத்²தோகை தாவெனத் தாழ்ந்தே னருட்பா லொழுக்
குகவே, (௬௮)

1. ஓகை = மகிழ்வு, 2. ஓ = கைதா.

ஒழுக்க மதனை யுயிரினு மோம்பென் னுரைகுறளை
இழுக்கம தின்றி யெனது மனத்தே யியையவைத்து
வழுக்க லிலாது நடந்திடு வண்ண மதியருள்வாய்
[1]கொழுக்கொம்பு ஞானக் கொடிக்கெனுஞ் சாலைக் குமரய்யனே (௬௯)

1 கொழுக்கொம்பு = கொழுகொம்பு + ககரவொற்று எதுகை நோக்கித் தோற்றம்.

குமர! [1]வரம்பை மிகுசாலை வேல! [2]குடிலமளி
தமர! [3]வரம்பையில் வேல்கொண்ட விந்திரன் சாடரவாய்
[4]செமர வரம்பையில் கான்வீழ்ந்த சீர்தெரிந் தேநின்மென்றாள்
அமர [5]வரம்பைய நல்கியாட் கொள்க வருள்சுரந்தே. (எ௰)

1. அரம்பை = வாழை, 2. குடிலமளிதமர = பிரணவ வொளியே, 3. அரம் + பயில் = அரத்தாற் செய்த, 4. செம் + மரம் + வரம்பையில் = எல்லையில்லாத, 5. வரம் + பைய = மெல்ல.

சுரந்திடு நன்னீர்ப் பொருநையிற் றுள்ளுமீன் றேய்ந்துபுயற்
கரந்திடு முத்த முதிர்க்க வளைவிழுங் காற்புடைத்துத்
திரந்திடு [1]வேழ நெடுங்கொம்பி னுற்றசெந் தேன்பெருகிப்
பரந்திடு செய்நிறை சாலைக் குமரனைப் பாடுமினே. (எக

1. வேழம் = கரும்பு.

பாட்டுக் குவந்[1]தனை [2]விற்சாலை யேய்பர! பண்பில்வினை
யாட்டுக் குவந்[3]தனை வேல! வெளிற்சீ ரருள்வையுன்றன்
மாட்டுக் குவந்தனை யன்புடன் செய்யில் வருவதிம்மெய்க்
கூட்டுக் கு[4]வந்தனை செல்வமெஃ தென்றெணிக் கூறுவதே. (எஉ)

1. அல் + நை = பிறவியிருளை மாய்க்கின்ற 2. விற்சாலை = ஞானவொளிவிளங்குஞ்சாலை, 3. அனை = சத்தி 4. வந்து = காற்று (உயிர்) அனை = அனைய.

கூறு புகழ்கொளு னின்மலர்த் தாளுறக் கூட்டுவையோ
வேறு புகலும் பலவாம் பிறப்பிடை வீழ்த்துவையோ
ஆறு முகங்கொள் ளணிசாலை யா!யறி யேனெனினுந்
தேறு தலைக்கொண்டு நின்பணி யாற்றித் திரிகுவனே. (௭௩)

திரிகையி லாய வரிசி படுஞ்செயற் சென்மமதை
யெரிகையி [1]லாயத் துரும்பெனச் செய்தே யெனையருடன்
கிரிகையி லாய முறைந்த வருண கிரியவனென்
[2]அரிகையி லாய வணிசாலை வேலவ! வஞ்சலென்றே. (௭௪)

1. ஆய் = இணுங்கிய + அத் 2. அரி = கிளி + கையில் + ஆய
= ஆராய அல்லது கொண்ட.

அஞ்சாங் குலப்புலக் கள்வர்க் ககப்படா வான்றவர்வாழ்
பஞ்சாங் குலத்தருச் சாலையின் வேடன் பணிவரையில்
நஞ்சாங் குலக்கண் ணரிவையே! யம்மண நாளறையில்
அஞ்[1]சாங் குலத்தவர் பார்ப்பாரைச் சேர லழகல்லவே. (௭௫)

1. அஞ்சு = ஐந்து + அங்குலத்தவர் = விரல்கள் + பார்ப்பாரை
= பார்ப்பவர்களாகிய கண்களை.

அல்லது முள்ளது மாகி யருவுரு வாகியுமேற்
சொல்லதுஞ் சொற்பொரு ளாகியு [1]மல்லதுஞ் சோதியுமாய்
நல்லதும் பொல்லது மாகிய தெய்வம் நனியுணரின்
[2]எல்லது மூடுருச் சாலையில் வேற்கொள் ளிறையென்பனே. (௭௬)

1. அல்லதும் = இருளும் 2. எல்லதும் = சூரியனும்.

இறையள வேனு நின்னை மறக்கில ளேன்றகற்பு
நிறையள வேறி மயங்கினண் மாலா லெனநிகழ்த்தி
கறையயில் சாலைக் குகனைக் கொடுவா கருதிலையேல்
நறையமர் பூங்கடம் பைக்கொடு வந்[1]துயிர் நல்கரியே. (௭௭)

1. உயிர் + நல்கு + அரியே = கிளியே.

நல்காய் மறுமொழி சாலை யறுமுக! நானிலத்தில்
சொல்லார வைணவ சைவக் குரவரிற் சூழ்ந்துசிலர்
எல்லாப் பவுத்தரை யும்[1] மாளப் பாடியு மெங்குமவர்
பல்லா யிரக்கணக் காகிப் பெருகிப் பரவலென்னே?. (எ௮)

1. மாள = மாய.

பரவி யருண கிரிமுத லாப்பல பாவலர்க
ளு[1]ரவி னளித்தநற் பாமாலை யேற்றநின் னுண்செவியில்
கரவி லெனதுபுன் பாக்களு மேற்குங் கருணையினை
பு[2]ரவி லரிநெல் விளைசாலை வேல! புரிந்தருளே. (எ௯)

1. உரவில் = விருப்பமுடன் 2, புரவில் நகர்ப்புரத்தில் + புரவுயென்பது வழக்கச்சொல்.

அருண்மய மானநின் றூறெழுத் தாய்ந்திடி லல்லிழை
மருண்மய மாதவன் முன்னூறு மஞ்சென மாயுமன்றே
இருணிற யானைகள் சேர்சாலை வேலவ! வெண்ணுநரின்
[1]கருணிலை யீர்ந்திடு செம்பாறு மூழ்கிக் கரைநின்றுமே. (௮௰)

1. கருள் + நிலை = அஞ்ஞானவிருளினிலையை.

கரை[1]யாழி போற்றுய ராக மதிகலை கற்புநிறை
வரை[2]யாழி சங்கு மிழந்தன ளிந்த மடமகள்பண்
ணுரை[3]யாழி லங்குநற் சாலைக் குமரனை யாரமொடு
[4]திரையாழி வைய மிசைவரக் கண்ட தினமுதலே. (௮௧)

1. ஆழி = கடல், 2. ஆழி = மோதிரம் + சங்கு = வளையல் 3. யாழ் + இலங்கு 4. திரை = திரைச்சீலையோடு கூடிய + ஆழி = சக்கரம் பொருந்திய + வையமிசை = வாகனமீது அல்லது இரதத்தின்மீது.

திளைந்தின முள்ளஞ் சிரமெண்ணித் தாழ்ந்து தெளிந்துமன
[1]தினந்தின முத்தளி சாலைக் குமரன் றிருத்தொண்டருக்
[2]கனந்தின நல்கு பவர்ஞான மெய்துவ ரன்றிபவ
[3]வனந்தின கச்சீ ரடைந்துபின் முத்தி யடைவரன்றே. (௮௨)

1. பனைத்தின் + நந்து = சங்கு + இனம், 2. அனம் = அன்னம் + தின = தின்ன, 3. பவ + அல் + நந்து = கெடுக்கின்ற + இன் + அகச்சீர்.

அடையு மவலுமுன் னின்னனை னின்கலை யாய்ந்தெண்ணிட
வடைவினி னீயுந் துதிக்கை யளந்துநல் லாடல்செய்தாய்
மடையினில் வாளை குதிசாலை வேல! நின் மாண்புணரா
மடைய ரிகழ்வ ரறியாது நின்றனி மாயையையே. (௮௭)

மாயையின் மக்களை மாய்த்திட்ட சாலை மரகதத்தைத்
தாயைப்பின் பற்றிடு கன்றெனச் சார்ந்தெணிற் சார்வர்முத்தி
காயையுங் காய்ந்த சருகையுந் தின்றுவெங் கானினிடை
தீயையு நண்ணி யருந்தவஞ் செய்யுஞ் செயலெதற்கே. (௮௬

செயலங்கை மன்ன னுடைவாளை [1]செய்மறுச் சீர்ப்பெயரை
மய[2]லங்கைப் பூவா விழைமத னம்மை மறலியினை
புய[3]லங்கை வண்ணன் மனைவியின் கோயிலைப் போலுமன்றே
[4]வயலங்கை யாயலி வேலன்வாழ் சாலை[5]மின் மான்விழியே. (௮௫)

1. செய் = நஞ்சை, 2. அங்கை = அழகியகை, 3. புயல் + மேகத்தின் + அம் = அழகை + கை = பழிக்கின்ற = வண்ணன் மனைவியின் கோயில் = தாமரை, 4. வயல் + அங்கு + ஐயா = அழகாக, 5 மின் = பெண்.

விழிபறித் தப்பிய கண்ணப்ப னோடு விளங்[1]கரியை
வழிபறித் [2]தப்புங் க[3]லியனோர் பத்தி வழங்கிபவப்
பழிபறித் துன்ற னடியார் குழாத்துடன் பற்றிவைப்பாய்
சுழிபறித் தோடும் பொருநைபாய்ச் சாலை சுகக்குகனே. (௮௯)

1. அரியை = விண்டுவை, 2. அப்பும் = மோதும், 3. கலியன் = திருமங்கையாழ்வார்.

சுகமெனச் சொல்லுதல் சும்மா விருத்த லெனச்சொல்லுவ
ரகமது மாய வடக்க லரிதரி தாயிரத்தின்

மிகவெள வெண்ணங்க ளெண்ணு மொருகண மேனுநில்லா
மகமலி சாலைக் குமரா! மடியம் மனத்தினையே. (௮௭)

மன[1]மாத ரஞ்சொலின் மாய நடையின் மயங்கிமலைத்
தன[2]மாத ரஞ்செய்து மாழ்கித் திரியுந் தமியனுக்கு
கன[3]மாத ரங்கநே ரானந்த வாழ்வு கனிந்தருள்பூ
[4]வனமாத ரங்கமென் சாலைவாழ் சுப்பிர மண்ணியனே. (௮௮)

1. மாதர்=பெண்டிர், 2. ஆதரம்=ஆசை, 3. கனமா=மேன்மையாக+தரங்கம்=கருணைக் கடல், 4. பூவனமாது=இலக்குமி+அரங்கமென்=சபையென்னும்.

மணியென்ற பேரினைக் கொண்டிடு வானவர் மண்ணிலிலை
மணியென்ற பேரினுஞ் [1]சுப்ரமண் யப்பெயர் வைத்திடலான்
மணிதுன்று சாலையை மன்னிய வேல! மதித்திடினீ
[2]மணிகொண்ட வானவர் யார்க்கு மிறையெனல் வாய்க்குமன்றே (௮௯)

1. சுப்ர=பிரகாசமுள்ள, 2. மணி=அழகு.

வாய்க்குச் சுவையென வாடுமீன் கோழிமான் மாட்டையுண்டு
பேய்க்குச் சரியெனத் தன்மை படைத்திட்ட பேதையர்க்கு
தாய்க்கு மினித்திடு மன்புறு னன்மதி தந்தருள்வாய்
ஈய்க்கு [1]மஞரிழை யாருறை சாலை யெழிற்குகனே. (௯௰)

1. அஞர்=துன்பம்.

## சந்தக் கலித்துறை.

எளியா ரரிமுத லோரிவர்க் கென்னு மிறைவர்கள்வாழ்
அளியார் [1]துடவையண் சாலைநட் புன்னு மயிலவனே!
ஒளியார் மதியலர் சூடியுட் டுன்ன வுவமையி[2]லோம்
வெளியா முரையினை யாடுதற் கென்ன விதியுளதே. (௯௧)

1. துடவை=சோலை, 2. ஓம்=பீஜாக்ஷரம்.

(வேறு)

விதித்திடு வேதன்கை வேலை யொழித்தினி மேல்வினையைக்
கொதித்திடு மாறன்பு மேவியி ழைத்தினி [1]கோப்புலவர்
மதித்திடு பேரின்ப வாழ்வை வழங்கிவெண் பாற்கடலி
லுதித்திடு [2]மாவொன்று சாலையை [3]நட்டச மூர்க்குகனே. (கூஉ)

1. கோப்புலவர் = தேவர்கள், 2. மாவொன்று = வெள்ளை யானை பொருந்திய, 3. நட்டு = இச்சித்து + அசம் + ஊர் = ஆட்டுவாகன மீது செல்லுகின்ற.

ஊர்க்குட் சிறந்திடு மாமலர்ச் சாலை யுறுகுமரா!
பார்க்குட் பரந்திடு நோய்மிகச் சாரும் பலபிறவி
[1]நீர்க்குட் படிந்திட நேரினட் போடு நினையெணிடு
வார்க்[2]குட் படிந்திடு பேறெனக் கீய மனதுவையே. (கூங)

1. பிறவிநீர் = ஜனன சமுத்திரம், 2 உட்படிந்திடு பேறு = அவர்களுக்கு நால்வகைத் தொண்டு புரியும் பெருமையை.

மனத்தை யினிநான் வணங்குவன் மாதவர் வாய்ந்திகழ்ந்த
தனத்தை யினிதா விரும்பினேன் புண்ணியர் தாழ்ந்துதந்த
அனத்தை துறவோ ரயின்றிடு சாலையை யாய்ந்தகந்தன்
[1]வனத்தை நனிசேர் பதந்துன நேருறு வாஞ்சைகொண்டே. (கூச)

1. அழகுசேர் பதத்தை யடைய நேருவாயாக.

கொண்டலை நீவுசீர்ச் சாலைக் குமரனைக் கூடபக்தி
யுண்டலை மேவிலைக் காணக் [1]கடுகிலைப் [2]பூசலினைப்
புண்[3]டலை நீரினிற் சேர்புற் படிமியற் போலவுரைக்
கொண்டலை வாய்மதிக் கோழைக் குணமமர்க் [4]கோண்மனமே. (கூரு)

1. கடுகிலை = தீவிரங்கொண்டிலை, 2. பூசலின் = உலகப் போரில், 3. அலைநீரினில் = கடலினலையில், 4. கோண் + மனமே = குற்றமுள்ள மனமே.

கோளுங் கரந்துறை யூழுநேர் நின்றிடு கூர்ஞ்சன்மமுந்
தேளு முளங்கொளு நோய்[1]மே மன்கர மேய்ந்திலகு
வாளும் படங்கொள ராவுநேர் நஞ்சது மாய்ந்திடுமெந்
நாளுங் கரும்புறு சாலைவாழ் கந்தனை நான்றொழவே. (சுரு)

1. ஏமன் = மறலி.

[1]நான்போ யிதமொடி ஞானில வாழ்வண்ணி நாளடைவில்
வான்போய் நலமுறு முத்தியை மேவிய மாதவரி
னேன்போ [2]யமுதநல் வாழ்வினை யெய்கி லேனெளியேன்
மீன்சேர் பொருநைபாய் சாலைவாழ் வேலனை மேவியந்தோ. (சுஎ)

1. நான் போய் = நானென்னும் ஆணவமலம் நீங்கி, 2. அமுத நல் வாழ்வு = ஞானமுத முண்ணும் பேரின்ப வாழ்வு.

வேவு விதியைச் சிறைநின்று மீள விதித்துமயில்
வாவு பொருநைத் துறைநின்ற சாலை வளர்குக!வென்
றேவுன் றுணைமலர்த் தாளொன்றி வாழ்த்தி நலம்பெறவே
மாவுருச் சூரனை மாய்த்தவ! தந்தாள் வரத்தினையே. (சுஅ)

ஏகாந்த மாக வுனையேத்த லின்றிக மேலந்திழையார்
மோகாந்த கார மதிகொண்ட சேயேன் மொழிந்தநனி
வாகார்ந்த தண்டமிழ் மாலைநன் கேற்றே மகிழ்ந்தருள்வாய்
[1]நாகாரந்த சாலை தனிலோங்குந் [2]தந்திம னந்தகனே. (சுகூ)

1. நாகார்ந்த = சங்குகள் நிறைந்த, 2. தந்திமன் = தாரகாசுரன்

ஆந்துறை செம்பு நதிதா னெனவான ராடுவரால்
தீந்துறை சிந்து [1]மலரூ ரெனஞாலர் சேருவரால்
[2]தேந்துறை யந்த முறநீ யெனநாதர் தேருவர்[3]வீ
தாந்துறை யென்றே தொழுவா ருனைவேல! சாலையிலே. (எ)

1. சிந்துமலரூர் = சிந்துபூந்துறை, 2. தேம் + துற + முத்தியின்பமுடைய + ஐ + இறைவன், 3. வீ + தாம் + துறையென்றே = இறப்பைத் தாண்டுகின்றவழி யிது வென்றே.

சாலைக் குமரேசர் அந்தாதி.

## வாழி.

வாழிசா லைக்கும ரேசனு ருஞ்ஜார்ஜு மன்னர்பிரான்
வாழிசீர் மேதகு தர்மகர்த் தாநெல்லை மாநகரும்
வாழியிந் நூலினை யச்சிடு மாண்பரிம் மாநிலமும்
வாழிவான் பேண்சிந்து பூந்துறை, தென்முகன் வாழியவே.

மங்களம்! மங்களம்!! மங்களம்!!!

அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி
தனிப்பெருங் கருணை அருட்பெருஞ் ஜோதி.

சாலைக் குமரேசர் அந்தாதி சம்பூர்ணம்.

சர்வம் சிந்மயம்
ஓம் தத் ஸத்.

